உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஜய – ஆனி – 2014 – ஜூன் இதழ் – 24

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

**பொருளடக்கம்**



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

## அவளடி காப்பு

அருள்நிறை முகத்தாள் அம்புய வல்லி
ஆரணம் சிறக்கக் காரண மான
அற்புத ஞானச் சிற்பரை நிமலி
அஞ்செழுத் தன்பர் நெஞ்சிடை நிலவும்
அங்கயற் கண்ணி பங்கயச் செல்வி
இருள்மலி ஆணவம் இல்லா தாக்கும்
எம்மவள் நெல்லை எனும்பெயர் நங்கை
இருகரை புரளும் இம்மது நதியின்
இறையிவள் முக்கணன் இடப்புறத் தேவி
ஈரிரு பெரியர் எழுதிய திருமுறைப்
பொருள்மலி வேதன் பொற்சடை முடியன்
பூவணம் காசி புகழ்மிகு தில்லை
புரந்திடும் ஞானப் பொன்மலர் ஆகிப்
புகழ்பதி கழனி வாசலின் இறைவன்
திருப்பொலி துணைவி தன்னிரு பாதம்
திகழ்முடி தாங்கிப் பணிபவர் பவநோய்
தீர்ப்பவள் ஆன தேவியின் பாதம்
தினம்தினம் பணிவோம் திசையெலாம் காப்பாள்
திருப்புகழ் சொல்வோம் அவளடி காப்பே.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

நன்மார்க்கங்கள் (பக்தி மார்க்கம், கருணை மார்க்கம், ஞான மார்க்கம்) மூன்றிலே கடைப்பிடிக்க எளிதானதும், எல்லாவற்றிற்கும் அடிப்படையானதும் பக்தி மார்க்கம் என்று அறிந்தோம்.

பக்திமார்க்கத்திலும் அடிப்படையானதும் எளிமையானதும் இறைவன் நாமத்தை நினைப்பதும் ஓதுவதுமான நாமாவளி. நாமாவளி என்பதற்கு நாமத்தை ஒழுங்கு முறையோடு ஓதுதல் (ஜெபித்தல்) என்று பொருள்.

ஏதோ ஒரு நாமத்தை - இறைவன் நாமம், குருநாமம் அல்லது குரு உபதேசித்த மந்திரச் சொல் ஏதோ ஒன்றைத் தொடர்ந்து சொல்லுதல். 'நாமஸ்வரணம்' அல்லது 'நாமாவளி' எனப்படும். நாளும் ஒரு குறிப்பிட்ட நேரத்திற்கோ அல்லது குறிப்பிட்ட எண்ணிக்கையோ மனதால் ஏற்றுக் கொண்ட நாமத்தை ஜெபித்தல் ஒவ்வொரு பக்தனுடைய கடமையாகும்.

எல்லாச்சமயங்களிலும் இந்த நாம ஜெபம் - மந்திர ஜெபம் அடிப்படையான நெறிமுறையாகக் கொள்ளப்படுகிறது. எல்லாச் சமயங்களும் இந்த மந்திரத்தை குரு மூலமாக உபதேசம் பெற வேண்டும் என்று அறிவுறுத்துகின்றன.

நாமத்தைத் தனக்குள் சொல்வது மனதிற்குள் சொல்லுவது, நாமத்தை வாய்விட்டு உரக்கச் சொல்வது 'உச்சாடானம்' என்பார்கள். இறைவனுக்குச் செய்கின்ற அர்ச்சனைகள் இந்த வகைப்படும். மனதிற்குள் சொல்லுகின்ற நாமம் மந்திரம் மனதிற்குத் தெளிவையும் தென்பையும் அளிக்கும். இதையே தொடர்ந்து செய்கின்ற பொழுது மனம் அலைசவற்றுச் சலனங்களைத் துறந்து அமைதி அடையும்.

இதையே தொடர்ந்து தியானத்தைச் செய்து வந்தால், 'தவம்' எனப்படும். இந்த நாம ஜெபமும், தியானமும் விருப்பமுள்ள யார் வேண்டுமானாலும் செய்ய முடியும். அதனால் பயனும் பெற முடியும். இப்படிப்பட்ட தியானத்தால் நம்முடைய செயல்கள், எண்ணங்கள், அனைத்தும் வலுப்பெறும். இந்தத் தியான முறைதான் முனிவர்களையும், யோகிகளையும், ஞானிகளையும் உருவாக்கியது. நம்மைப் போன்ற சாதாரண மக்கள் முழுமையாகத் தியானத்தில் ஆழ்வது என்பது இயலாத காரியம். தினமும் குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட அளவு நாமஸ்வரணம் செய்து பின்னர் குறிப்பிட்ட நேரம் தியானத்தில் அமைதியாக இருப்பது நமது அன்றாடக் கடமைகளைத் திட்பநுட்பத்துடன் செய்ய உதவும்.

அடுத்த கட்டமாக இறைவனுடைய கல்யாண, ஆற்றலை அறிந்து உணர்ந்து போற்றவும் பாடவும் பரப்பவும் ஏதுவாக அமையும். முதல் படியாக தியானத்தைக் கடைப்பிடிக்க முயற்சிப்போம்.

*ஆசீர்வாதங்கள்!*

# மடாலய நிகழ்வுகள்

20.5.2014 அன்று 6-ஆவது பட்டம் ஸ்ரீமத் அண்ணாமலை ஞான தேசிகர் குருபூஜை மிகச் சிறப்பாக நிகழ்ந்தது.

24.5.2014 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சி சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலையில் நடைபெற்றது. காப்பியக் கவிஞர் நா. மீனவன் அனைவரையும் வரவேற்றுப் பேசினார். காரைக்குடி, இராமசாமி தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் முனைவர் சே. நாகநாதன், விறல் மிண்ட நாயனார் மற்றும் ஏனாதி நாத நாயனார் குறித்துச் சிறப்புரை வழங்கினார். பேராசிரியர் ம.கார்மேகம் நன்றி கூற நிகழ்ச்சி இனிதே நிறைவுற்றது.

29.5.2014 அன்று தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் 92ஆவது பிறந்த நாள் விழா சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. கைவல்ய நவநீதம், பகவத் கீதை, தெய்வ நீராட்டு, நன்னெறி நூல், மாணவர்களுக்கான பாரதியார் பாடல்கள், கோயிலூர்ப் புராணம் ஆகிய நூல்கள் வெளியிடப் பெற்றன. அமுதசுரபி ஆசிரியர் டாக்டர் திருப்பூர் கிருஷ்ணன் நூல்களை வெளியிட்டுச் சிறப்புரை வழங்கினார். காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழக முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் தெ. சொக்கலிங்கம் நூல்களை வெளியிட்டு வாழ்த்துரை வழங்கினார். நூல்களைப் பெற்றுக் கொண்டு நற்கதை நம்பி டாக்டர் அய்க்கண் வாழ்த்துரை வழங்கினார். முன்னதாக நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் ம.கார்மேகம் அனைவரையும் வரவேற்றார். நிறைவாகக் கோவிலூர் மடாலய நிர்வாக மேலாளர் திரு.அழகப்பன் நன்றி கூறினார்.

7.6.2014 அன்று கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக்குலேசன் மேனிலைப் பள்ளியின் புதிய கட்டடத் திறப்பு விழாவோடு மேனிலை

வகுப்புகள் தொடக்க விழாவும் நடைபெற்றது. சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் விழாவிற்குத் தலைமை ஏற்றுத் தலைமை உரை ஆற்றினார்கள்.

இயக்குநர் இமயம் திரு. பாரதிராஜா குத்துவிளக்கேற்றிக் கட்டடத்தைத் திறந்து வைத்ததோடு மேனிலை வகுப்புகளையும் தொடங்கி வைத்துச் சிறப்புரையாற்றினார். புகழ்பெற்ற திரைப்பட எடிட்டர் திரு. லெனின், புகழ்பெற்ற காமிராமேன் திரு. கண்ணன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். விழாவில் கோவிலூர் சனாதன தர்ம உலகப் பல்கலைக் கழக அறநிலை நிறுவனங்களில் பணிபுரியும் முதல்வர்கள், பேராசிரியர்கள், ஆசிரியப் பெருமக்கள், அலுவலர்கள், மாணவச் செல்வங்கள் திரளாகக் கலந்து கொண்டனர். முன்னதாகக் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக்குலேசன் மேனிலைப் பள்ளி முதல்வர் திருமதி. மணிமொழி மோகன் வரவேற்புரை நிகழ்த்தினார். நிறைவாகப் பள்ளியின் துணைமுதல்வர் திருமதி. வள்ளியம்மை நன்றி கூறினார். பேராசிரியர் ம.கார்மேகம் நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார்.

7.6.2014 அன்று கோட்டையூர் சொக்கலிங்க ஐயா குருபூஜையும் 10.6.2014 அன்று கொத்தமங்கலம் அருணாசல சுவாமிகள் குருபூஜையும் நடைபெற்றன.

11.6.2014 அன்று ஸ்ரீமத் திருக்களர் ஆண்டவர் குருபூசை மிகச் சிறப்பாக நடைபெற்றது.



ஸ்ரீசேஷாத்ரி சிவனார் அருளிய

# நா நா சீவ வாதக் கட்டளை (தொடர்ச்சி)

உரை விளக்கம் : சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

## நூல்

இனித் தத்துவங்கள் ஒடுங்குகின்ற முறை சொல்லுகின்றோம். சகல சீவரிடத்திலும் இருக்கின்ற தூல சரீரங்கள் அனைத்தும், தமக்கு ஆதாரமான தூல பூதங்களிலே மடிந்து பூதமாத்திரமாக ஒடுங்கும். இந்தத் தூல பூதங்களும், பஞ்சீகரணம்விட்டுத் தன்மாத்திரைகளான தமோகுண பூதங்களாக மிஞ்சும். அப்போது கேவலம் இரண்யகர்ப்ப அவத்தை என்று சொல்லப்படும். சூக்ஷம சரீர தத்துவங்கள் இருபதும் கட்டுவிட்டுப் பூதங்களினுடைய சத்துவ குணமும், இரஜோ குணமுமாக ஒடுங்கும்; அஃது எங்ஙனம் எனின் : - சகல பிராணிகளிடத்திலும் இருக்கின்ற அகங்காரமும், கிராணேந்திரியமும், உதானவாயுவும், உபஸ்தேந்திரியமும் பிருதிவியில் ஒடுங்கும். சித்தமும், சிங்ஙவையும், சமானனும், பாயுருவும் அப்புவில் ஒடுங்கும். புத்தியும், சக்ஷுவும், அபானனும், பாதமும் அக்கினியில் ஒடுங்கும். மனதும், துவக்கும், பிராணனும், பாணியும் வாயுவில் ஒடுங்கும். உள்ளமும், சுரோத்திரமும், வியானனும், வாக்கும் ஆகாசத்தில் ஒடுங்கும். அப்போது பழையபடியே முக்குண பூதங்களாகும். இந்தச் சூக்ஷம பூதங்களும், பிருதிவி அப்புவில் கரைந்து ஒடுங்கும். அப்புவும், அக்கினியில் சுவறி ஒடுங்கும். அக்கினியும், விளக்குப்போல வாயுவில் அணைந்து ஒடுங்கும். வாயுவும், ஆகாசத்திலே ஓய்ந்து ஒடுங்கும். ஆகாசமும், விக்ஷேப சத்தியில் ஒடுங்கும். ஆவரண சத்தியும், விக்ஷேப சத்தியும், மூலப் பிரகிருதியின் தமோகுண மாத்திரமாய், ஆலமரம், ஆலம் விதையில் ஒடுங்கினால்போல, இன்னம் ஒரு சிருஷ்டிக்கு வித்தாக, அவித்தையிலும் மாயையிலும் ஒடுங்கும். இந்த அவித்தையும், மாயையும் அதி நுண்மையான மூலப் பிரகிருதி

என்று சொல்லப்பட்ட விந்து தத்துவத்தில் ஒடுங்கும். அந்த விந்துவும், பாம்பு என்கின்ற பெயர்போய்ப் பழுதையாகக் கண்டாற்போலத் தனக்கு அதிஷ்டான சைதன்னியமான பிரமசைதன்னிய மாத்திரமாக ஒடுங்கும். இப்படிப் பொய்யெல்லாம் மெய்ப்பொருள் ஒன்றாகக் கண்டு, அதுவே சுபாவ சித்தமாய், நிசமாயிருக்கின்ற தன் வடிவு எனக்கண்டு தெளிந்து, கவலை கெட்டிருக்கின்றவனே சீவன் முத்தன். இப்படித் தத்துவங்களின் ஒடுக்கம் சொல்லப்பட்டது.

## உரை

### சுத்தப்பிரம்மம்

பிரம்மம் (இறைபொருள்) + சக்தி பரைவிபாபகம் (பரப்பிரம்மம்)

பரப்பிரம்மம் மாயை

மாயை சத்துவம் + ரஜோ + தமஸ்

மாயை + சத்துவம் ஈஸ்வரன் (முக்குணஈசன்)

+ சத்துவம் / ரஜோ / தமஸ்

(மூலப்பிரகிருதி) விஷ்ணு / பிரம்மா / ருத்ரன்

சகல துக்க நிவாரணச் சத்சித் ஆனந்த பரப்பிரம்மம்)

மாயை + ரஜோ அவித்தை + ஜீவர்கள்

ஜீவர்கள் + சத்துவம் / ரஜோ / தமஸ்

ஞானநிஷ்டன் கர்மநிஷ்டன் சோர்வு குழப்பம்

### ஆவரணம்

மாயை (அவித்தை) + தமஸ் விட்சேபம்

ஆவரணம் = ஞானத்தை மறைத்தல்

விட்சேபம் = மாயையுடன் கூடிய இயக்கம்

ஐம்பூதங்கள் (சூட்சும பூதங்கள் / நுண்பூதங்கள்)

**சூட்சும பூதங்களின் சத்துவ குணம் + ஐம்பூதங்கள் அந்தக் கரணங்கள் தோற்றம் :**

| | | | | |
|---|---|---|---|---|
| சத்துவம் – | சத்துவம் – | சத்துவம் – | சத்துவம் – | சத்துவம் |
| + | + | + | + | + |
| ஆகாயம் | வாயு | அக்னி | நீர் | பூமி |
| உள்ளம் | மனம் | புத்தி | சித்தம் | அகங்காரம் |

**சூட்சும பூதங்களுடன் சத்துவ குணம் கூடி ஞானேந்திரியத் தோற்றம் :**

| | | | | |
|---|---|---|---|---|
| சத்துவம் | சத்துவம் | சத்துவம் | சத்துவம் | சத்துவம் |
| + | + | + | + | + |
| ஆகாயம் | வாயு | அக்னி | நீர் | பூமி |
| காது | தோல் கண் | சிங்குருவை | நாக்குநுனி | மூக்கு |
| (சப்தம்) | (ரூபம்) | சட்சு | ஆக்ராணம் | (வாசனை) |
| சுரோத்திரம் | | | | |

**அந்தக்கரணங்கள் ஐந்தும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் ஞானகாரியங்களைச் செய்வதால் ஞான உறுப்புக்கள் ஆகும்.**

**சூட்சும பூதங்களுடன் ரஜோ குணம் கூடி வாயுக்கள் தோற்றம்:**

| | | | | |
|---|---|---|---|---|
| ஆகாயம் | வாயு | அக்னி | நீர் | பூமி |
| + | + | + | + | + |
| ரஜோ | ரஜோ | ரஜோ | ரஜோ | ரஜோ |
| விபாணன் | பிராணன் | அபாணன் | சமானம் | உபாணன் |
| (தேகமுழுதும்) | இதயம் | (நாபி) | (குதத்தில்) | (கண்டம் / |
| | | கண்டம் | | கழுத்து) |

**சூட்சும பூதங்கள் + ரஜோ குணம் கூடிக் கர்மேந்திரியங்கள் தோற்றம்:**

| | | | | |
|---|---|---|---|---|
| ஆகாயம் | வாயு | அக்னி | நீர் | பூமி |
| + | + | + | + | + |
| ரஜோ | ரஜோ | ரஜோ | ரஜோ | ரஜோ |
| வாக்கு | பாணி | பாதம் | பாயுரு | உபஸ்தம் |
| (முன்கை) | | (மலம்) | (பிறப்புறுப்பு) | (வெளியேற்றம்) |

வாயுக்கள் ஐந்தும் கர்ம்யேந்திரியம் ஐந்தும் கிரியைகள் / காரியங்களைச் செய்வதால் காரிய இந்திரியங்கள் எனப்படும்.

சூட்சும பூதங்களில் இருந்து பஞ்ச கிருத்தியம் மூலமாக தூல பூதங்கள் உண்டாகின்றன.

சூட்சும பூதங்கள் + பஞ்சக்ருத்தியம் = தூல பூதங்கள் (காணக்கூடிய உணரக்கூடிய ஐம்பூதங்களின் தோற்றம்)

ஆகாயம் + வாயு + அக்னி + நீர் + பூமி

இவை ஐந்துடன் தமோ குணம் கூடித் தூல உடம்புகளைத் தோற்றுவிக்கின்றன.

தூலபூதங்கள் (ஐந்து) + தூல உடம்பு (6) (தோல் , நரம்பு, எலும்பு, ரத்தம், சதை, மஞ்சை) தத்துவங்களின் தோற்றம் இவ்வாறு நிகழ்ந்ததை இதுவரை பார்த்தோம்.

| | |
|---|---|
| (பிரம்மம், மாயை, ஈஸ்வரன் , அவித்தை , வித்தை) | - 5 |
| தூல உடம்பு | - 6 |
| ஐம்பூதங்கள் | - 5 |
| அந்தக்கரணங்கள் | - 5 |
| ஞானேந்திரியம் | - 5 |
| வாயுக்கள் | - 5 |
| கர்மேந்திரியம் | - 5 |
| | --------- |
| ஆக | - 36 |
| | --------- |

ஆக முப்பத்தாறு தத்துவங்களின் தோற்றம் தொகுக்கப்பட்டன.

**இப்பொழுது ஒடுக்கம் எவ்வாறு நிகழும் என்பதைப் பார்ப்போம்.**

தூல உடம்பின் தத்துவங்கள் ஆறும் தூல பூதங்களில் ஒடுக்கம்
தூல பூதங்களில் பூமி நீரில் அமிழ்ந்து ஒடுங்கும்
நீர் அக்னியால் ஒடுங்கும் -
அக்னியும் விளக்கின் ஒளி போல வாயுவிலே ஒடுங்கும் -
வாயுவும் ஆகாயத்தில் ஒடுங்கும் - ஆகாயம்.

தூல சரீரம் வினைப்பயன் இருக்கும் வரை சூட்சும சரீரம் இருந்து அனுபவிக்கும். வினை முடிந்த பின் காரணசரீரத்தில் சூட்சும சரீரத்தை

அடக்கிக் கொண்டு தூல சரீரம் பிரிந்து விடும். அதுவே மரணம். ஆனால் ஞானியற்கு அவித்தை நீக்கியதன் காரணமாக, காரண சரீரம் நாசமடைந்து விடும். அதனால் வினைமுடிந்ததும் சூட்சும சரீரம் பிரிய இயலாது. உலை இரும்பு கண்ட நீர் போல அழிந்து விடும். இந்நிலையே ஜீவன் முக்தி எனப்படும்.

## நூல்

இப்படித் தோன்றி ஒடுங்கின தத்துவங்கள் - 36, அவையாவன :- பூதங்கள் - 5, ஸ்தூல சரீர தத்துவங்கள் - 6, சூக்ஷும சரீர தத்துவங்கள் - 20, காரண சரீரமான மாயை, அவித்தை - 2, இவற்றில் பிரதிபிம்பித்த சீவன், ஈசுரன் - 2, இவைகட்கெல்லாம் அதிஷ்டான சைதன்னியமாய் இருக்கின்ற பிரமம் - 1, இவையாம். இவைகளில் பூதங்கள் - 5 , மாயை - 1, பிரதிபிம்பரான ஈசுரன் - 1, பிரமம் - 1, ஆக இந்த எட்டும் சகல பிராணிகளுக்கும் சமுதாயமாக அனுபவிக்கப்படும். மற்றை இருபத்தெட்டும், அவன் அவனுக்கு பிருதக் ஆக அனுபவிக்கப்படும். அஃது எங்ஙனம் எனில், பிருதிவி தத்துவம் ஒன்று இறக்கில் எல்லோருக்கும் ஆதாரம் இல்லை. மழை மறுக்கில், எல்லோருக்கும் சலம் இல்லை. தேயு இல்லாதிருந்தால், பாகம் இல்லை. வாடை, தென்றல் இல்லாவிட்டால், வாயு இயக்கம் இல்லை. ஆகாசம் இறக்கில் ஒருவருக்கும் அவகாசம் இல்லை. மாயையும், மாயாப் பிரதிபிம்பரும் இறக்கில் சகல சமயங்களுக்கும் தெய்வம் இல்லை. பிரமம் இல்லையேல் ஒருவருக்கும் அறிவு இல்லை; ஆகையால் இந்த எட்டும் எல்லோருக்கும் சமுதாயமாம். பிருதக் எங்ஙனம் எனின், ஒருவனுக்கு ஸ்தூல சரீரம் இறக்கில், எல்லோருக்கும் ஸ்தூல சரீரம் இறவாதபடியினாலும், சூக்ஷும சரீரத்தில் ஒருவனுக்கு அங்க வைகல்யம் வந்தால், எல்லோருக்கும் வாராதபடியினாலும், முத்தராயிருந்த சுகர் வாமதேவர் முதலியோருக்கு அவித்தையும், சீவனும் இறந்துபோயிருக்க, மற்றையோருக்கெல்லாம் அவித்தையும்,

சீவனும் இறவாத படியினாலும், இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும், அவனவனுக்குப் பிருதக் என்பதில் சந்தேகமே இல்லை.

## உரை

உள்ளம், சுரோத்திரம், வியாணன், வாக்கு நான்கும் ஆகாயத்தில் ஒடுங்கும். மனம், தோல், பிராணன், பாணி இவை நான்கும் வாயுவில் ஒடுங்கும். புத்தி, சட்சு, அபாணன், பாதம் இந்நான்கும் அக்கினியில் ஒடுங்கும். சித்தம், சிங்குவை(வாக்கு), சமாணன், பாயுரு நான்கும் அப்புவில் (நீரில்) ஒடுங்கும். அகங்காரம், ஆக்ராணம், உபாணம், உபஸ்தம் இவை நான்கும் பூமியில் ஒடுங்கும்.

பூமி - நீர் - அக்கினி - வாயு - ஆகாயம்

என ஒடுங்கும். தூல பூதங்கள், சூட்சும பூதங்களில் ஒடுங்கி விட்சேப சக்தியில் ஒடுங்கும். இப்படியாக

| | | |
|---|---|---|
| தூல உடம்பு | - | 6 |
| அந்தக்காரணம் | - | 5 |
| ஞானயேந்திரம் | - | 5 |
| வாயுக்கள் | - | 5 |
| கர்கேந்தரியம் | - | 5 |
| தூல பூதங்கள் | - | 5 |
| | | 31 |

இவையாவும் பரப்பிரம்மத்தில் ஒடுங்கும்.

| | |
|---|---|
| ஜீவன் - ஈஸ்வரன் ஆக | 2 |
| வித்தை - அவித்தை | 2 |
| பிரமம் | 1 |

ஆக 36 தத்துவங்களும் பிரம்மத்தில் ஒடுங்கும்.

பிரம்மம் தோன்றுவதும் இல்லை; ஒடுங்குவதும் இல்லை. அதனை ஒரு தத்துவமாகக் கொள்வது விளக்கத்திற்காகவும் உபகாரத்திற் காகவும் தான்.

*தொடரும்....*

சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

# சிறுத்தொண்டர் வரலாறு

சிறுத்தொண்டர் வரலாற்றுக்குள் நுழையுமுன்னர் அடிப்படை ஐயம் தீர்க்கப்பட வேண்டும். ஒரு அடியவர் வேண்டுதலுக்காகத் தன் பிள்ளையை யாரும அரிந்து சமைக்க முடியுமா ? என்பது எல்லார் மனத்தும் எழும் ஐயம்.

நேர்மையோ ஒழுக்கமோ இல்லாத அரசியல் தலைவர்க்காக உயிரைத் தியாகம் செய்யும் தொண்டர்களைப் பார்க்கிறோமே ! இறைவர்க்குச் சமமான அடியவர்க்காக உயிரைத் தத்தம் செய்வதில் என்ன வியப்பு.

சிறுத்தொண்டர் - பரஞ்சோதி என்ற இயற்பெயர் கொண்டவர். பல்லவ மன்னரின் படைத்தளபதியாக இருந்து போர்கள் பல வென்று - மன்னவரிடம் இருந்து திரவியம் நிறையப் பெற்று வந்தவர். சிவத்தொண்டை உயிர் மூச்சாகக் கொண்டவர். எல்லா வகைத் தர்மமும் செய்தாலும் அடியவர்க்கு நாள் தவறாது அன்னம் பாலிப்பதைத் தலையாய கடமையாகக் கொண்டவர். அவர்தம் மனைவியாரும் பெருங்குடிப் பிறந்த நற்பண்புடையார். திருவெண்காட்டு நங்கை எனும் பெயர் கொண்டார். இவர்கட்கு ஒரு செல்வமகன் சீராளன். பெயருக்கேற்பச் சீராட்டி வளர்க்கப் பெற்றவன். இவர்கள் இல்லத்துப் பணிப்பெண் சந்தனநங்கை நாயகியார் தாய் வீட்டுச் சீதனமாக உடன் அழைத்து வரப்பெற்ற நம்பிக்கையானவர். நாயனார் பிறப்பாலே மாமத்தியர் குலத்தினர். மாணிக்கவாசகப் பெருமானும் இக்குலத்து உதித்தவரே. அந்தணர் குலத்தில் ஒரு பிரிவு போலும்.

நாயனாரும் நாயகியாரும் சைவமும் தமிழும் தழைத்தோங்கப் பிறந்த திருஞானசம்பந்தரைத் தம் இல்லம் அழைத்து உபசரிக்கும் பேறு பெற்ற பெரியவர்கள்.

இத்தகு வாழ்வில் இறைவன் சோதனையாக ஒரு நாள் இல்லம் வந்து உணவு கொள்ள எந்த அடியவரும் கிடைக்கவில்லை. நாயனார் அங்கும் இங்கும் தேடி அலைகிறார். அது சமயம் சிறுத்தொண்டர் இல்லத்தை நாடிக் காளாமுக பைரவர் வேடத்தில் இறைவனே வருகின்றான்.

"தொண்டு ஆனார்க்கு எந்நாளும் சோறளிக்கும் திருத்தொண்டர் வண்டார் பூந்தாரார் இம்மனைக்குள்ளாரோ ?" என்று கேட்டுக்கொண்டு வந்து சேர்கிறார்.

சந்தன நங்கை - வெண்காட்டு நங்கை இருவரும் பலவாறு வேண்டியும் மனைதங்க ஒப்பாது "கணபதிச்சுரத்து அத்திமரத்தடியிற் காத்திருக்கிறேன்; சிறுத்தொண்டர் வரின் அங்கே வரச் சொல்லவும்" என்று கூறிப்போய் விடுகிறார். தேடிச்சலித்து அடியவர்களை எங்கும் காணாது வருத்தமுடன் வரும் சிறுத்தொண்டர்க்கு இந்தச் செய்தி காய் நிலத்துப் பெய்த மழையாக மகிழ்விக்கிறது. ஓடுகிறார். சிவன் அடியாரை வணங்கி வேண்டி அழைக்கிறார். சிவனடியாரும் மெல்ல மெல்ல வலை விரிக்க நாயனார் தமது அதீத ஆவலினாலேயும் தன் மீது இருந்த தீவிர நம்பிக்கையாலும் வசமாகக் சிக்கிக் கொள்கிறார்.

இதனை ஒரு அழகான நாடகமாகவே காண்பிக்கிறார் சேக்கிழார்.

முதலில் நாயனாரின் வீரத்தையும் - இறை பக்தியையும் தொண்டின் சிறப்பினையும் வருணித்து அவரைக் கதாநாயகனாக உருவாக்குகிறார். பின்னர் தவம் செய்து பெற்ற பெற்றோர் 'சீராளனை' எப்படிச் சீராட்டி வளர்த்தார்கள் என்பதனை விரிவாக வருணித்துப் பின்னர் ஏற்படும் துன்பியல் அவலச்சுவை மனதில் உறைக்கச் செய்ய வழி வகுத்துக்கொள்கிறார். அதன் பின்னர் வந்த வடபுலத்து வைரவர் தோற்றத்தைப் பலபட வருணித்து ஒருவித வெறுப்பையும் சினத்தையும் நம் மனதில் எழச்செய்து அவரை ஒரு வேண்டாத வில்லனாக உருவகம் செய்து நடைபெறப் போகும் நிகழ்ச்சிக்கு உறுதியான பின்புலத்தை நிறுவிக்கொள்கிறார்.

இப்போது நாடகம் தொடங்குகிறது.

"அடியேன் மனையில் எழுந்தருளி அமுது செய்ய வேண்டும்"

"உமைக்காணும் படியால் வந்தோம். உத்தரா பதியோம். எம்மைப்பரிந்து ஊட்ட முடியாது. உமக்குச் செய்கை அரிது". "ஒண்ணாதது" என்றார். மேலே பாருங்கள் - மூன்று எதிர்மறைச் சொற்கள் - உம்மால் ஊட்ட முடியாது - அரிது - ஒண்ணாதது என்று எச்சரிக்கை. ஏன் ? நாயனாரை உசுப்பேற்றத்தான்; முடியாது என்று சொன்னதால் அவர்க்குத் தீவிரம் அதிகம் ஆகிறது.

"எனக்கு அரியது ஏதும் இல்லை - சொல்வீர் என்ன செய்ய வேண்டும்" என்கிறார் நாயனார்.

"நாம் உண்பது ஆறு திங்களுக்கு ஒரு முறை தான். அந்த நாள் இன்றுதான் - நாம் உண்பது பசு வீழ்த்திட" என்கிறார் பைரவர்.

"என்னிடம் எல்லாவிதமான பசுக்களும் உண்டு. எந்தக் குறையும் எனக்கில்லை எல்லாம் என்பால் உண்டு" அகங்காரம் தெளிவாகத் தெரிகிறது.

அடுத்த குண்டைப் போடுகிறார் பைரவர்.

"நாம் உண்ணும் பசு மனிதக்குழவி - ஐந்து வயதிற்குள் - ஒரு குடிக்கு ஒரு மகனாக உள்ள மனிதப் பசுவைத்தான் உண்போம்"

"என்னால் செய்ய இயலாதது ஏதும் இல்லை மேலும் சொல்வீராக" தளபதிக்கே உரிய செருக்கு வீறாப்புப் பேசி வினையைப் பெறுகிறது.

"தாதை அரியத் தாய் பிடிக்கும் பொழுதில் தம்மில் மனம்
உவந்தே.
ஏதம் இன்றி அமைத்த கறி யாம் இட்டு உண்பது" என மொழிந்தார்.

மூக்கனாங் கயிறு கச்சிதமாகக் கழுத்தில் படிந்து விட்டது. இனித் தப்ப முடியாது.

பைரவர் சாட்டைக்கேற்ப நாயனார் ஓடித்தான் ஆக வேண்டும்.

வீடு திரும்பித் தன் நாயகியாரிடம் செய்தியைக் கூற, அவரும் மலையாது "பெரிய பைரவத்தொண்டர் அமுது செய்வதற்கு இங்கு உரியவகையில் அமுது அமைப்போம்" - ஆனால் சிறுவனைப் பெறுவது எவ்வாறு என்று கேட்ட பின்தான் நாயனார்க்கு உறைக்கிறது.

பெருந்தனம் கொடுத்தால் கறி சமைக்கக் குழந்தை தர யாரேனும் முன் வரலாம். ஆனால் தாய் பிடிக்கத் தந்தை அரிய யாவரே சம்மதிப்பார் - என்ற ஐயம் தோன்றியது.

ஆனால் அடுத்த கணமே

"எனை இங்குய்ய நீ பயந்தான் தன்னை அழைப்போம் யாம்" என்று கூறுகிறார். என்ன மனஉரம் - தீவிரம் - பாருங்கள். நாயனார் முன்னே தளபதியாக இருந்த காலத்து பல உயிர்களைப் போர்க்களத்தே போக்கியவர் நிலையாமை பற்றி நன்கு உணர்ந்தவர். பற்று பாசம் அதிகம் இல்லாதவர் தலைகளைச் சீவத் தயங்காதவர். எனவே அவர்க்கு இச்செயல் ஓரளவிற்கு எளிதாக இருந்திருக்கலாம். 'நீ பெற்ற பிள்ளை' என்கிறார் பாருங்கள்.

தாய்க்கு எப்படி இருந்திருக்கும் - ஆனால் இந்தத் தாயும் ஒப்புகிறார். எப்படி 'எம்பிரான் தொண்டர் இன்று தாழாது அமுது செய்யப்பெற்று இங்கவர் மலர்ந்த முகம் நன்று காண்பது' என நயந்து "நம்மைக் காக்க வருமணியைச் சென்ற பள்ளியினிற் கொண்டு வாரும் என்றார் திரு அனையர்". நாயகி "நமைக்காக்க வருமணி" என்கிறார் பாருங்கள். அடியவர் தொண்டில் எவ்வளவு ஈடுபாடு. தன் மகனைத் தத்தம் செய்தாவது அவர்க்குத் தாழாது அமுது செய்விக்க வேண்டும். அவர் மனமும் முகமும் மகிழ்வதைக் காண வேண்டும் என்று எண்ணுகிறார். இங்கே தந்தை கூறத் தாய் ஒப்புகிறார். கட்டாயமோ வற்புறுத்தலோ இல்லை. இருவர்க்கும் சிவனடியார் தொண்டு பொதுவானதே !

தந்தை மனதாலும் உடலாலும் இச்செயல்கட்குப் பக்குவப் பட்டதால் இதற்கு ஒப்புக்கொள்வது எளிது; ஆனால் தாய் இதற்கு ஒப்புக் கொண்டது என்பது மிக அரிய செயல் அல்லவா? இது எக்காரணங்களால் செய்ய இயன்றது? சிந்தித்துப் பார்க்குங்கால் என் மனதில் தோன்றியவை :

1. தானும் கணவரும் இணங்கி ஏற்றுக்கொண்ட தொண்டு தடை படக் கூடாது.
2. தடைப்படுமே ஆனால் கணவர் உயிர் துறப்பர்; அதன்பின் எல்லாம் இருந்தும் ஏதும் இல்லாத நிலைதானே !
3. தாய்ப்பாசத்தை மீறிய கணவர் மீது கொண்ட அக்கறை
4. சிவனடியவர்க்குத் தத்தம் செய்தல் பிறவிப்பயன் என்ற நம்பிக்கை.

மேற்சொன்ன காரணங்களால் தான் கணவர் கூறிய வழியை நாயகியாரும் ஏற்றுக் கொள்கிறார். எங்ஙனம் ஆயினும் இவர் தியாகம் நாயனார் தியாகத்தினும் மேலானது அன்றோ ?

அடுத்து இவர்கள் பிள்ளைக் கறி அமுது செய்ததனைப் பார்ப்போம்.

சிறுத்தொண்டர் பள்ளிக்குச் சென்று பிள்ளையை அழைத்து வந்து தாயிடம் தருகிறார். அவரும் அள்ளி அணைத்து உச்சிமோந்து மகிழ்கிறார். ஆனால் அடியவர்க்கு அமுதாகப் போகிற பிள்ளை என்பதனால் முத்தம் கொடுக்க வில்லையாம் "முத்தம் தாம் உண்ணார்" என்கிறார் சேக்கிழார். என்ன பக்தி பாருங்கள். புகழால் "மெய்த் தவ உலகைவென்ற தாதையார் தலையைப்பிடிக்க தாயார்" குழவியின் கைகால்கள் இரண்டினையும் மடியில் இடுக்கிக் கொண்டாராம். இது கண்ட பிள்ளையோ தாய் தந்தையர் நம்முடன் விளையாடி மகிழ்கின்றனர் என்று எண்ணி மகிழ்ந்து நகை செய்ததாம். தலை அறுத்து உறுப்புக்களைத் தனித்தனிக் கறியாக்கினார்களாம். தலைக்கறி அடியவர்க்கு ஆகாதென ஒதுக்கி வைத்து மற்றவற்றை அடியவர் ஆணைப்படி சோறும் கறிகளும் ஒரு சேரப்படைத்தனர்.

அடியவரை அமுது செய்ய முறைப்படி அழைத்துப் பாதமலர் கழுவி வணங்கி ஆசனத்தில் இருத்திய பின் அடியவர் கூறுகிறார்.

'யாவும் உள்ளன; ஆனால் தலைக்கறியைக் காணவில்லையே' என்றாராம். எப்படி இருக்கும் பெற்றவர்களுக்கு. பிள்ளையை அரிந்து கறி அமுதாக்கிப் படைத்தால் அதனை ஆராய்ச்சி செய்து குறை சொல்கிறார் பைரவர். இதனால் அவர் அமுதுண்ணத் தடங்கல் ஏற்பட்டு விடுமோ !

நல்ல வேளை, புத்திசாலியான பணிப்பெண் சந்தனநங்கை, வந்த அடியவர் அதையும் கேட்கக்கூடுமோ என்றெண்ணிச் சமைத்து வைத்திருக்கிறேன் என்று கூறி எடுத்து வருகிறார். அப்பாடா பிழைத்தோம் என்று பெருமூச்சு விடுகிறார்கள்.

ஆனால் அவர்களை அவ்வாறு எளிதாக விட்டுவிட மனம் இல்லை பைரவர்க்கு - 'நாம் தனியாக உண்ணுவதில்லை - ஈசன் அடியார் யாராவது இருந்தால் அழைத்து வாரும்' என்கிறார்.

நாயனார்க்கு நம்பிக்கை போய்விடுகிறது. யாரும் கிடைக்காமற்றானே அலைந்து நொந்து வந்திருக்கிறார்.

"கெட்டேன் அமுது செய்ய இடையூறு இதுவோ" என்று அலறுகிறார். நாயனார் பொறுமையையும் மனவலுவையும் ஒருங்கே சோதிக்க அடுத்த வெடிகுண்டைப் போடுகிறார் பைரவர்.

"உம்மைப் போல் நீறிட்டார் உளரோ ? உண்பீர் நீர்"

எம்முடன் என்று அழைக்க, எப்படியாவது அடியவரை அமுது செய்விப்போம் என்ற உறுதியில் அதற்கும் ஒப்புகிறார் நாயனார்.

தன் பிள்ளையைத் தானே அரிந்து சமைத்த கறியைத் தானும் உண்ணும் நிலை - வேறு எவராலும் ஒருப்பட இயலுமா ?

கல் நெஞ்சரா நாயனார் ? இல்லை. தன் தொண்டு தடைப்பட்டு அவமானத்தால் அழிவதை விட எதுவும் மேல் என்ற மனநிலைதான்.

மேலும் ஏதேனும் இடையூறு தோன்றுமுன்னர் அமுதருந்தச் செய்து விட வேண்டும் என்கிற ஆவலில் பைரவர் உண்ணுமுன் உண்ண முயல்கிறார்.

பைரவரோ நாம் ஆறு மாதம் ஒரு முறை உண்ணுபவர்; நீரோ தினம் உண்பவர்; இருந்தும் இப்படி அவசரப்படுகிறீரே ! என்று கிண்டல் வேறு செய்கிறார்..

மேற்கொண்டு தன் திருவிளையாடலைத் தொடர்கிறார்.

'உமக்கு மகவு உண்டேல் அவனை அழையும்' எனக் கூற கலங்கிப் போகிறது இவர்கட்கு.

நாமாக இருந்தால் உண்மையை உடைத்துச்சொல்லி, சாப்பிட்டால் சாப்பிடும்; இல்லை என்றால் நடையைக் கட்டும். மேலும் மேலும் எங்களைச் சித்ரவதை செய்யாதீர் என்று அலறியே இருப்போம்.

ஆனால் நாயனார் "இப்போது உதவான் அவன்" என்கிறார். (இதே சொற்பிரயோகத்தை அப்பூதி அடிகள் வரலாற்றிலும் காணலாம்).

நாம் இங்குண்பது அவன் வந்தால் நாடி அழையும் என்கிறார். மந்திரத்துக்குக் கட்டுப்பட்டவர்கள் போல் 'அவர் அமுது செய்ய யாம் என் செய்வோம்' என்ற மயக்கத்துடன் வெளியில் ஓடி "மைந்தா வருவாய்" என நாயனார் அழைக்கத் தையலார் தலைவர் பணி தலை நிற்பவராக, "செய்ய மணியே சீராளா ! வாராய் சிவனார் அடியார் யாம் உய்யும் வகையால் உடன் உண்ண அழைக்கின்றார்" என்று ஓலம் இடுகின்றார்.

இங்கே பாருங்கள். அவர்கள் தானே மகவை வாளால் அரிந்து அமுது படைத்தார்கள் அடியவர் அழையுங்கள் என்றதும் எந்த நம்பிக்கையில் இருவரும் அழைக்கிறார்கள. இறை நம்பிக்கை தான். வந்துள்ளவர் இறைவன் அடியார் - அழையுங்கள் என்கிறார். அழைத்தால் வருவான் என்ற இறைவன் பால் கொண்ட நம்பிக்கை தான்.

சீராளதேவர் பள்ளியினின்று வருவது போல் ஓடி வந்து விடுகிறார். பணிப்பெண் உட்பட யாவர்க்கும் இறைவன் தோன்றி அருள் பாலித்து வீடு பேறு அளிக்கிறான்.

இந்த அழைப்பு இரண்டிலும் உள்ள வேறுபாட்டையும் நுணுக்கமாகப் பார்க்க வேண்டும்.

நாயனார் 'மைந்தா வாராய்' என்று சொந்தம் கொண்டாடி அழைக்கின்றார்.

நாயகியோ அவன் அடியவர்க்காக ஆனவன் என்று தெளிந்தவராக சீரளா வாராய் - அடியவர் உடன் உண்ண அழைக்கின்றார் என்கிறார்.

இவரை 'தலைவர் பணி தலை நிற்பராய்' - என்கிறார் சேக்கிழார். தலைவர் யார் சிறுத்தொண்டரா என்றால் அப்படி அவர் எண்ணவில்லை என்றே தோன்றுகிறது.

எல்லார்க்கும் தலைவரான சிவனார் பணியைத் தலை மேற்கொண்டு அழைக்கிறார் என்றுதான் பொருள்படுகிறது.

இந்த வரலாற்றை நோக்குங்கால்,

நாயனார் செயல்பாட்டிலே செருக்கு, அவசரம், நம்பிக்கையின்மை, குழப்பம் தெரிகின்றன. நாயகியார் செயல்பாடுகளிலோ குழப்பம் இல்லை, நல்ல தெளிவு தெரிகிறது. ஐயம் இல்லை. முழு நம்பிக்கை ஒளிர்கிறது. நடப்பது ஈசன் செயல் என்ற தீர்மானமும் தெரிகின்றது.

எனவே நாயனாரிலும் சிறப்புடையவர் நாயகியாரே !

இவர் தம் பணிப்பெண் கூட இவர் தம் திருத்தொண்டில் முழு மனதோடு ஈடுபட்டிருக்கிறார். சிறுத்தொண்டர் வரலாற்றிலே தொண்டர், நாயகியார், மகன், பணிப்பெண் என அனைவரும் பங்கேற்றுத் திருத்தொண்டை நடத்தியிருக்கின்றனர்.

*தொடரும்....*

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### I/01/01 ஸ்ரீராமனின் மனவருத்தமும் அவர்தம் ஐயப்பாடும் :

முற்குறிப்பு : ஒன்றாம் பிரகரணமான (பகுதி) வைராக்யப் பிரகரணம், I எனக் குறிப்பிடப்பட்டு, அதில் முதலாவதான இக்கதை, 01 எனவும், மொத்தமுள்ள 37 கதைகளில் இது ஒன்றாவது (01) என்பனவற்றிற்கான குறியீடாக I/01/01 தரப்பட்டுள்ளது. இக்குறியீட்டு முறை மேலுமுள்ள கதைகளிலும் தொடரும்.

**கதைப்பகுதி :** ஸ்ரீராமர், அவர்தம் குருகுலக் கல்வியை முடித்த பின்னர், சிறிது காலம் அரண்மனையில் வாழ்ந்தார். தந்தையின் அநுமதி பெற்று, தன் தம்பியருடன், நாடு முழுதும் சுற்றிப் பார்த்தார். அப்போது, அவருக்குப் பல்வகையான அனுபவங்கள் கிட்டின. அரண்மனை திரும்பியதும் அவற்றை நினைவு கூர்ந்தார். அவரது அனுபவங்கள் பெரிதும் துன்பம் தருவன என்பதை உணர்ந்து குழப்பமடைந்தார். இதனால் சோர்ந்து, துவண்டு, உடல் மெலிந்தார். அவர் நாள்தோறும் செய்வன மற்றும் அரசு வேலைகளைத் தவிர்த்து ஒதுங்கினார்.

அப்போது அரசவைக்கு வருகை புரிந்த விசுவாமித்திர முனிவர், தசரத அரசரால் முறையாக வரவேற்கப்பட்டார். "தங்கள் வரவால் மகிழ்ச்சி பெருகுகிறது. தாங்கள் விரும்பும் பொருளோ அல்லது எனக்கிடும் கட்டளையோ, யாதாயினும் அது தாங்கள் எண்ணியவாறே முடிந்தது எனக் கொள்வீராக" என வேண்டிய அரசரிடம்,

**"முன்னுறு செந்தீ வேள்வி முயல்வதற்கு இடையூறாகி**
**இன்னல்செய் அரக்கர்க்கு ஆற்றாது எய்தினன் இரங்கல்**
**வேண்டும்"**

எனக் கூறிய முனிவர்,

**"மருளுறும் அரக்கர் காலன் வாய்மை நின்முதன்மை மைந்தன் தெருளுறும் ராமனென்னும் சிகைமுடிச் சேயை ஈவாய்" என்றார்.**

மகனைப் பிரியத் தயங்கிய மன்னனிடம், "மன்னவர் சொல் மாறலாகாது. கலக்கம் வேண்டாம். இராமனின் மேன்மைக்காகவே முனிவர் வந்துள்ளார்" என்றார். அதற்குத் தசரதர், இராமன் தற்போது வருத்தமுற்று, அமைதியுற்று, பேசாதிருப்பது பற்றிக் கூறினார். இது கேட்ட முனிவர்,

**"கைப்படும்இம் மாமோகம் காதலினால் ஆபத்தால் கலந்ததன்றால்**
**செப்பரிய நிராசையினால் விவேகத்தால் வரும் உணர்வின் செல்வமாகும்",**

எனக் கூறி இராமனை அவைக்கு அழைக்குமாறு பணித்தார்.

அரசவை வந்த இராமன், அனைவரையும் முறைப்படி வணங்கினார். ஆனால், அவரது இருக்கையைத் தவிர்த்துத் தரையில் அமர்ந்தார். "உன் மன வாட்டம் எதனாலெனக் கூறுவாயாக. நீ பாவமற்றவனாதலால், உன் துயர் நீங்கும், நீ எதனை விரும்பினாயோ, அது உன்னை அடைந்ததாகக் கருதலாம்" என்ற முனிவரிடம் இராமன்,

**"இந்த நெடுஞ் சகமோகத்து இச்சை எலாம் தீர்ந்தது இதில் இன்பமில்லை**
**அந்தமுறல் பிறப்பதற்கே பிறப்பதுமீட்டு இறப்பதற்கே அநித்தம் யாவும்"**

எனத் தொடங்கி, உலக வாழ்க்கை அனுபவங்கள் நிலையற்றவை -யாகவும் துன்பம் தருவனவாகவும் உள்ளனவே எனவும்,

**"நசையுறு பெரியோர் எங்ஙன் நவையுறு துயரம் தீர்த்தார்**
**இசையநீ உணர்ந்தது அந்த நிலையினை எனக்குச் சொல்வாய்"**

எனவும், அத்தகைய அருள்மொழி கிட்டாவிடில்,

**"முழுகுதல் தானமாதி நியமங்கள் முழுதுஞ் செய்யேன்**
**விழுமிய கருமம் சம்பத்து ஆபத்தில் மேவேன் யாக்கை**
**நழுவுவது அன்றி ஒன்றும் நயக்கிலன் மவுனியாகி**
**எழுதும் ஓவியம்போல் காமம்கோபம் பற்றின்றி நிற்பேன்"**

எனும் தன்னிலை விளக்கமும் கூறினார்.

ஸ்ரீ ராமர் ஆன்மீக நாட்டத்தில் முன்னேறியுள்ளதையும் அவருக்கு உபதேசம் (அருள்மொழி) தேவை எனவும் உணர்ந்த விசுவாமித்திரர், "சுகப்பிரம்ம முனிவருக்கும் கூட இத்தகைய உபதேசம் தேவைப்பட்டது" எனத் தொடங்கி, அக்கதையைக் கூறத் தொடங்கினார். (இது I/02/02 என அடுத்த இதழில் தொடர்கிறது)

**தத்துவப் பகுதி :**

ஸ்ரீ ராமரின் வருத்தத்திற்குக் காரணமாக அவர் கூறும் வாழ்க்கை அனுபவங்களாவன : 1) பிறப்பு இறப்புச் சுழற்சி, 2) மாறுபாடுடைய அரச வாழ்க்கை, 3) தாரதம்மியம் பார்க்காது சேரும் பொருட் செல்வம், 4) வேறுபடும் ஆயுள், 5) அகங்காரம் உண்டாக்கும் இழிவுகள், 6) மனதின் இடைவிடா அலைவுகள், 7) தொடர்ச்சியான வெவ்வேறு ஆசைகள், 8) நோயும், அழுக்குடைய பருவுடல், 9) அறியாமையுடைய சிறு வயது (பாலப் பருவம்), 10) புத்தி கலங்கும் இளமை, 11) கலவித் தூண்டில் வீசும் பெண்கள், 12) மைந்தரும் நிந்திக்கும் நோய், 13) விரும்பியதை அனுபவிக்க இயலாத, நகைப்பிற்கு இடம் தரும் முதுமை, 14) இறப்பினை எதிர் நோக்கும் மந்த நிலை, 15) நல்லோர், அழகுடையோர், தேவரும் கூட விழுங்கப்படும் காலம்/காலன் ஆகியனவாகும். இவற்றின் காரணமாக, **"வினையுறு மரணம் வாழ்நாள் இரண்டையும் விரும்புகில்லேன்"** என்றார். இவை ஒவ்வொன்றும் நிலையற்று, மாறுபாட்டிற்கு ஆட்படுதலால், இவை உண்மையல்ல, ஆனால் தாம் தாழ்மை அடையக் காரணமாகின்றன.

இதனால் தமக்கு இவற்றை அனுபவிக்க விருப்பமில்லை எனத் தன் பற்றின்மையைத் தெரியப்படுத்துகிறார். இவற்றை எவ்வாறு எதிர் கொள்வது, அல்லது இவற்றுடன் எவ்வாறு மன அமைதிபெறுவது எனும் ஐயப்பாட்டைக் கூறி, இவற்றிற்குரிய விளக்கத்தை (உபதேசம்) வேண்டுகிறார்.

சுகப்பிரம்ம முனிவருக்கே இத்தகைய உபதேசம் தேவைப்பட்டது என்பதில், அன்றைய மக்களில் பலர், தேவர்கள் மற்றும் (தாமாக விசாரம் செய்ய இயலாத) நாமும் கூட உபதேசம் தேவைப்படுபவர்களே எனும் கருத்துப் பொதிந்துள்ளது. ஏனெனில், ஸ்ரீராமரின் அனுபவங்கள் இன்றைக்கும் பொருந்துவன.

[ **பிற்குறிப்பு** : 1. மேற்கூறிய 15 அனுபவங்களும் மிக விளக்கமாக, பாடல் எண் 47 - 118ல் தெரிவிக்கப்பட்டுள்ளன. 2) வீடு பேற்றிற்குக் கருவிகளெனக் கூறப்படும் 4 பண்புகள் : விவேகம் (பகுத்தறிவு), வைராக்யம் (பற்றின்மை), சமாதிஷட்க சம்பத்தி (சமம் முதலிய 6 சம்பத்துக்கள்) மற்றும் முமூட்சுத்வம் (வீடுபேற்றில் விருப்பம்) ஆகும். இவ்றறில், ஸ்ரீராமரின் குருகுலக் கல்வியால் அவர் விவேகம் பெற்றதும், தற்போதைய அனுபவங்களால் வைராக்யம் பெற்றதும் தெரிவிக்கப் பட்டுள்ளன. மீதமுள்ள இரு கருவிகளும் இந்நூலில் விவரிக்கப்படுகின்றன. இவற்றுள் சமம் முதலிய ஆறு சம்பத்துக்களை : சமம் (மன அடக்கம்), தமம் (விரும்பாமை), உபரமம் (விடல்), திதீக்ஷா (சுகித்தல்), சிரத்தை (குருவின் சொல் மற்றும் சாத்திரத்தில் முழு நம்பிக்கை), சமாதானம் (ஒருமைப்பாடு) எனவும், இறுதியிலுள்ள வீடுபேற்றை : ஜீவன் முக்தி (உயிருள்ளபோதே வீடுபேறு) மற்றும் விதேக முக்தி (உடல் விழுந்தபின் வீடுபேறு) எனவும் கூறப்பட்டுள்ளது.]

*தொடரும்....*

# கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

## திருநாட்டுப் படலம்

### மருதம்

விரும்புபெரும் செம்மணியும் வெண்முத்தும் எடுத்(து)எறிந்து
சுரும்புநெறி மலர்ப்பிறங்கல் சுமந்துகரை இறஒதுக்கி
அரும்புபல விரைவிருக்க மடிபறித்துச் சாய்த்(து) ஆர்த்து
வரும்புதிய திரைபொங்க மண்டிஎழு புனற்பொருநை. 41

ஓடுகால் பலபடைத்து நிலையுடைய(து) ஒருஞான்று
நாடுநீர் அறா(து)இயலும் நலம்உடைய(து) உயர்சைவம்
கூடுமான் மியம்உணர்ந்த கொள்கைஉடை யதுநாளும்
பாடுசால் வையைஎனும் நதியும்ஒரு பால் உளதால். 42

பாறுசுழல் சூற்படையான் பால்அருள்கொள் வாரும்அவன்
வீறும்அருள் பெற்றார்பால் விளங்கதுகொள் வாரும்என
மாறுதவிர் மழைநிரைக்கும் ஏரிகளும் மழைநிறைக்கு
மாறுநிறைத் திடநிறையும் ஏரிகளும் அள(வு)இலவால் 43

சாற்றுறுமூ லப்பகுதி மற்(று)அதனில் தமோகுணமே
போற்றும்அதில் விட்சேபம் புகஅதில்தன் மாத்திரைகள்
தோற்றுவிதம் எனமதகேய் அதில்பெருங்கால் அதில்சிறுகால்
காற்றும்அதில் நின்றுபல கைகால்களாய்க் கிளைப்ப 44

ஆசிரியன் இனிதுகவி அருள்ஞான கலைமுதல
மா(சு)இரியும் மாணவர்தம் மதிக்கேற்பப் புகுவனபோல்
பேசுபெருங் கால்உதவும் பெரும்புனல்பல் கழனிதொறும்
கூசுதல்இ லாதவைதானயக் கொளறு(கு)ஏற்பப் போய்ப்புகுமால். 45

பெறல்அரிய பெரும்பயன்நூல் பெட்டபடி கிடைத்தலொடும்
செறல்அரிய மதியாளர் தேர்ந்(து)உணர விரைவதுபோல்
உறல்அரிய நறும்புனல்வந்(து) ஒழியாது பரத்தலொடு
இறல்அரிய தொழில்உழவர் எங்கும்உழு தொழில்விரைவார் 46

அலம்புகும்ஏர்க் காற்கழுத்தின் நரைத்தநுகத்(து) இருதலையும்
குலம்புகுவன் பகடுபிடர் கொளப்பூட்டிக் கொழுமேழி
நலம்புகும்ஓர் கரம்பற்ற நகுசிறுமுள் கோலொன்றுவ
வலம்புகும்ஓர் கரம்பற்றி மள்ளர்தெழித்(து) உழுவரால் 47

கிழக்(கு)இருந்து மேற்(கு)ஏகிக் கெழுமாடத் தியநாஞ்சில்
வழக்கமிகு தெற்(கு)இருந்து வடக்(கு)ஏக நடத்திடுவார்
பழக்கம்மிகு சுழிகுளம்என்(று) எடுத்(து) இசைக்கும் ஒருபாவை
முழக்கம்மிகு பெரும்புலவர் மொழிந்துநடத் துதல்பொருவ 48

ஞானவயி ராக்கியத்தால் ஞாலத்து நெருங்கிவளைந்(து)
ஆனகுழாம் முழு(து)ஒழியத் தானேயாய் அமைந்(து) இருக்கும்
மோனமிகு ஒருவனைப்போல் முருக்குகொழு நாஞ்சிலால்
கானம்என வளைதருபுல் கழியவயல் தனித்ததே 49

எத்துணைநூல் கொளுத்திடினும் ஏற்கும்வலி உண்டாதற்(கு)
ஒத்தபெருங் கட்டளைமுன் ஏற்றிவலி உறுத்துதல்போல்
எத்துணைநீர் பாய்த்திடினும் ஏற்கும்வலி உண்டாதற்(கு)
ஒத்தகுலைக் கங்(கு) அரிந்தாங்(கு) ஏற்றிவலி உறுப்பரால் 50

அருப்புமிகு கருணையால ஆசிரியர் மாணவர்பால்
விருப்புவெறுப்(பு) அறத்திருத்திச் சமரசம்செய் விதமேபோல்
பொருப்புமலி தோள்உழவர் புரைகழனி மே(டு) அவல்என்(று)
இருப்புவகை அறச்சமம்செய் திடுவர்பரம் பால்எங்கும் 51

அறிதருநல் ஆசிரியர் அடிஅடைந்த மாணவர்பால்
செறிதருமுப் பதப்பொருள்உள் தெரிந்துபுகட் டிடுவதுபோல்
அறிதருவன் தொழில்உழவர் அள்ளல்அமை தருவயல்பால்
செறிதருபல் நெல்வித்துள் தெரிந்துவிதைத் திடுவரால் 52

உரைசெய்கார ணத்(து)உள்ள(து) உள்ளதே காரியத்தும்
தரைசெய்மா முகில்விளர்த்துச் சலதிஉண்டு பசந்ததுபோல்
விரைசெய்வான் கழனிதொறும் வித்தியநெல் முளைவிளர்த்துத்
திரைசெய்நறு நீருண்டு பரந்ததுபின் தெளிதரவே. 53

காதல்மிகு மனுஎன்பான் கைவருமீன் பணைப்புணர்ந்து
மேதபுவே(று) இடம்புகுத்தி விருத்திசெய்த திறமான
ஏதம்இல்வன் தொழில்உழவர் நாறுபறித்(து) எவ்விடத்தும்
கோ(து)அகலப் பதித்திடுவார் அதுவிருத்தி உறல்குறித்தே. 54

சென்றுவயல் பதிநாறு சிறிதுசாய்(வு) அடைநத்துதீர்ந்(து)
ஒன்றுபணைப் புற்(று)எழலும் உறுதவத்தில் கூ(று)ஆகிக்
கன்றுகொடும் காமாதி கலந்(து)எழுவ(து) எனமுளைத்த
துன்றுநறுங் குவளையும்செங் குவளையும்சூழ் தாமரையும் 55

களைகளையும் பருவம்உணர் கடைசியர்தம் குழாம்புகுந்து
வளைகழனி இடைத்துவன்று வாரிசங்கள் கொய்திடுவார்
தளைஉறுநீர் இடைமீட்டும் தங்கள்முக நிழல்கண்டு
விளையும்இது ககனார விந்தமோ எனமருள்வார். 56

தரைமுழுதும் இனி(து)ஓம்பும் தண்பயிருக்(கு) ஊ(று)இழைப்பான்
நிரைநிரைவந்(து) ஆம்பலொடு புண்டரிகங் களும்நெருங்கி
உரைஅமையாக் கருஞ்சேற்றில் படுதலின்ஒண் மடவாரே
விரைஅடர்த் திடத்துணிந்தார் மள்ளர்துணை வேண்டாதே. 57

மிடிகெடுக்கும் பயிர்க்(கு)ஊ(று)ஆய் மேவியமுண் டகம்ஆம்பல்
கடிகெடுக்கும் தன்மைஇலாக் கருநீலம் முதல்யாவும்
வடிகெடுக்கும் கருங்கண்ணார் வயலினிடைக் களைந்(து)எறிந்தார்
குடிகெடுக்கும் இராகாதிக் குற்றங்கள் களைவார்போல். 58

இராகம்முதல் குற்றம்எலாம் இரிந்(து) ஒழிய ஒருவனுக்குப்
பராவுதவம் பெருத்(து)ஓங்கிப் பணைத்(து)என்னப் பைங்கூழ்க்கு
விராவுகளை எனப்படுதோம் விடுபடலும் தடித்(து)ஓங்கித்
தராதலம்மிக்(கு) உவப்(பு)உறஅத் தவப்பயன்போல் கதிர்ஈனும் 59

அள(வு)இல்உயிர் களும்புரக்கும் அம்மையும்அப் பனும்இரங்கிப்
பிள(வு)இல்பெருங் கருணையின்நெல் பெரும்பயிர்காத்(து)
இனி(து)ஓம்ப
வளம்மலியும் திருநாட்டு மருவுபயிர் ஆதலினால்
தளர்(வு)அறஒண் கதிர்இன்று தடித்துவிளைந் தனமாதோ. 60

அரிபருவம் உணர்உழவர் அரிதருகூன் இரும்புகொடு
விரிதருயா வையும்அரிந்து மேவுபுரி கொடுவரிந்து
புரிதருவண் களம்சேர்த்துப் பொன்மலையில் போர்புரிந்து
கரியகடாப் பலபிணைத்துக் கால்துகைப்ப நடத்துவரால் 61

முந்திரிகைக் கனியோடு முயங்கியவித்(து) ஒழிப்பதுபோல்
நந்தியவைக் கோல்வேறு நாடுறுநெல் வே(று)ஆக்கி
முந்(து)எழுகால் வழித்தூற்றி மொய்பதடி துகள்மாற்றிச்
சந்தவரை போல்குவித்துத் தவாஅறமாற் றுவஆற்றி. 62

இறைகொளஉள் அறைஉறவி எச்சம்அளந்(து) எடுத்துப்போய்
நிறைபெருங்கூ டுகள்நிறைத்து நிகழ்தருதென் புலத்தார்முன்
அறைதருதாம் ஈ(று)ஆக ஐம்புலத்தார் உறஓம்பிப்
பெறஅரிய தவம்ஆக்கும் பெருங்குடியே எவ்விடத்தும். 63

கலைத்தொகையின் விளையாடல் செய்தவர்கா மருபதியும்
நிலைத்தஉகிர்க் குறிகள்போ லத்தணிந்தார் நெடும்பதியும்
நலத்தவே அடிமுளைத்தார் நற்பதியும் தன்இடம்கொள்
குலத்தபணைப் பெருமைஎவர் கூறுவர்நெய் தலும்புகல்வாம். 64

## நெய்தல் (வேறு)

சலதி மீன்கணம் வெடிகொடு தாவக்
குழவு புன்னைகள் உகுப்பன குளிர்திரள் அரும்பு
சுலவு மாமுகில் ஆயிடை நீர்உண்டு கறுத்த
நிலவு மின்னல்செய்(து) ஆவிகள் உகுப்பன நிகரும் 65

குலவு ஞாழலும் புன்னையும் கைதையும் கொழுந்தேன்
நிலவு செய்தலும் பெருமண நெந்திரை பரப்பிப்
புலவு மாற்றும் தங்களைப் புரப்பவர் பழிதீர்த்(து)
உலவு மேன்மையில் பொலிதரும் உத்தமர் ஒத்தே. 66

அலைமி சைத்திமில் செலுத்திடும் அரவமும் ஆங்கு
வலைநி மிர்ந்(து)எறி முழக்கமும் வலையிடைப் படுமீன்
உலைத ரக்கவர் முழக்கமும் பொய்என அதனைக்
கொலைஉ றச்செயு முழக்கமும் கடற்(கு) எதிர்கூறும். 67

உற்ற மீன்களைப் பிளப்பவர் சும்மையும் ஒருங்க
பற்ற உப்(பு)அதில் புரட்டுவார் அமலையும் பறவை
முற்ற அஞ்சுமா(று) ஓச்சுவார் துழனியும் முற்ற
விற்ற வாம்பொருள் ஈட்டுவார் அரவமும் மிகுமே. 68

செங்கை யார்அழல் சிவபிரான் உத்தர கோச
மங்கை வாழிரா மேச்சுரம் வண்புன வாயில்
கங்கை யாள்மகன் சீரலை வாய்முதல் கைக்கொள்
கொங்கை மேவிய நெய்தலுக(கு) ஒருகுறை உண்டோ. 69

## பாலை

குரவு பாடலம் நெல்லிஈந் திகைமுதற் கொண்டு
கரவு தீர்த்(து)அருள் கொற்றவை கோட்டமும் கவின
உரவு சான்றுடன் போக்கினர்க்(கு) உற(வு)உப சரித்துப்
பரவு பாலையும் புகழ்படைத் தமையும்பண் பினதே. 70

*தொடரும்....*

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**